REGD. No. TN MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



**திடமனம்**

கண்டனத்தைத் தாங்கிக் கொள்ளும் திடமனம் இல்லையென்ருல் கடமையைநிறைவேற்ற முடியாது.

— பேரறிஞர் அண்ணு

# அண்ணு

நிறுவனர் : எம். ஜி. ஆர்

**மேம்பாடு**

நாம் அரசியலில் எவ்வளவு தான் சுதந்திரம் பெற்று விட்டாலும் அறிவில் உலக வளர்ச்சித் தன்மையில் மேம்பாடு அடைய வேண்டும்.

— தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 28—9—1981 திங்கள் வெளியூர் 29—9—1981 செவ்வாய் இதழ் 338

## சென்னையே கைகொட்டிச் சிரிக்கிறது:

# தி.மு.க. நடத்தும் பிண அரசியல்

## இந்திராவுக்காக நடைமுறையை மாற்றிக் கொண்ட மன்னர்

நூகுஅலோபா, செப். 28- கிழக்கு ஆசிய நாடுகளில் ஒன்று டோங்கா.

இந்நாட்டில் ஓர் விசித்திரமான நடைமுறை இன்னும் பின்பற்றப்பட்டு வருகிறது. இதன்படி டோங்கா நாட்டின் மன்னர், சாதாரண குடிமகன்வீட்டிற்குச்செல்லுவதில்லை. அப்படி ஏதாவது ஒரு வீட்டிற்கு மன்னர் செல்ல வேண்டியநிலை ஏற்பட்டால் அவ்வீட்டைச் சேர்ந்தவர் பிறகு அவ்வீட்டில் வசிக்கக்கூடாது.

அதே போல் டோங்கா மன்னர் ஓர் ஓட்டலுக்கு சென்ருல், அதன் பிறகு அந்த ஓட்டலில் மன்னரின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே செல்ல முடியும்.

இன்றளவும் இந்தநடைமுறை டோங்கா நாட்டில் பின்பற்றப்பட்டுவருகிறது. டோங்கா நாட்டிற்கு வருகை தந்துள்ளஇந்தியப் பிரதமர் இந்திராகாந்தி டோங்கா மன்னர்டோப்புவுக்கு விருந்தளிக்கிருர்.

இந்த விருந்து மன்னர் பரம்பரையைச் சேர்ந்த ஒருவர் வீட்டில் நடக்கிறது.

தனது அரண்மனையைத்தவிர வேறு எங்கும் விருந்துக்கு இதுவரை செல்லாத டோங்கா மன்னர் இந்தியப்பிரதமர் இந்திரா அளிக்கும் விருந்தில் பங்கேற்க வழக்கமான நடைமுறையை மீறி விருந்து நடக்கும் வீட்டிற்குச் செல்லுகிருர்.

இந்தியாவிற்குடோங்கா நாட்டில் தூதரக அலுவலகம் இல்லை.

## குடும்பத்தகராறு காரணமாக தற்கொலை செய்துகொண்ட கழகத் தோழியருக்கு தி.மு.க. சாயம் பூசும் கேவலம்

**சென்னை, செப். 28- குடும்பத் தகராறு காரணமாக தற்கொலை செய்து கொண்ட கழகத்தைச் சேர்ந்த மேரி என்ற பெண்ணின் பிணத்துக்கு தி. மு. க. சாயம் பூசிய தி.மு.க.வினரின் இழிசெயல் அம்பலமாகி இருக்கிறது.**

பிணங்களை வைத்து அரசியல் நடத்தும் நடைபிணங்களாக கடந்த சில நாட்களாக தி.மு.க.வினர் செயல்பட்டு வருவது தெரிந்ததே.

எங்கே எந்த பிணம் விழுந்தாலும் அது கருணநிதியை விடுதலை செய்யக் கோரி விழுந்த பிணமாக தி.மு.க. தரப்பில் பித்தலாட்டம் செய்யப்பட்டு வருகிறது.

திருச்சியில் கா.கா.தே.கா.தொண்டன்மனேகரன் என்ன காரணத்தாலோ தற்கொலைசெய்துகொள்ள. மனேகரன் பிணத்தைதி.மு.க.வினர்ஆக்ரமித்துக் கொண்டு கருணநிதிக்காக அவன் இறந்ததாகக் கதை கட்டி விட்டனர்.

திருச்சி மாவட்டம் மீன் சுருட்டியில் திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்ட காட்டுப் பூனை என்கிற ராமையன்என்பவர் என்ன காரணத்தாலோ தீ வைத்துக் கொண்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கிருர்.

உடனே ஜெயங்கொண்டத்தைச் சேர்ந்த தி.மு.க.வினர் காட்டுப்பூனையை "தி.மு. க. தியாகி"யாக்க முயற்சித்துள்ளனர். (செய்தி விவரம் 4-ம் பக்கம்)

தி. மு. க.வின் இந்தப் பிணந்தேடி பித்தலாட்ட அரசியலுக்கு சென்னையைச் சேர்ந்த ஒரு பெண்ணும் பயன்படுத்தப்பட்டிருக்கிருர்.

சென்னை ஒட்டேரியைச் சேர்ந்த கணேசன், இவர் ஒரு ரிக்ஷாக்காரர்.

இவரது மனைவி மேரி. வயது 30.

மேரிக்கும், அவரது கணவர் கணேசனுக்கும் அடிக்கடி தகராறுவரும் என்றும்

(5-ம் பத்தி பார்க்க)

### புதிய தொழிற்சாலைகளுக்கு

## மூன்று வருடங்களுக்கு

# மின் வெட்டு இல்லை

## அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தகவல்

**சென்னை, செப். 28-தமிழகத்தில் புதிதாக ஆரம்பிக்கப்படும் தொழிற்சாலைகளை முதல் மூன்று வருடங்கள் மின்வெட்டு இல்லாமல் இயங்கச் செய்வது பற்றி அரசு பரிசீலித்து வருவதாக அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினர்.**

தமிழ்நாடு சிறு தொழில் அதிபர்கள் சங்கத்தின் சார்பில் "சியோ — எக்ஸ்போ- 81" என்ற தொழில் பொருட்காட்சி சென்னை தேனம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கண்காட்சி துவக்க விழாவிற்கு மின் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தலைமை வகித்தார்.

அப்போது அவர் பேசுகையில் கூறியதாவது:

தமிழகத்தில் மின்சார நிலைமை மிகவும் திருப்திகரமான நிலையில் உள்ளது. தற்போது எவ்வித கட்டுப்பாடும் இல்லை. இத்தகைய நிலை தமிழகத்தில் இப்போதுதான் முதன் முதலாக ஏற்பட்டுள்ளது. மின்சார உபயோகத்தின் உச்சகட்ட நேரத்திலான கட்டுப்பாடுகளசிறு தொழில்களுக்கும் கூட அகற்றப்பட்டுள்ளது.

### தாராள மின் சப்ளை

மின் உபயோகத்தின் உச்ச நேரத்திலும் கூட எப்பொழுதும்சிறுதொழில் களுக்கு கட்டுப்பாடு இல் லாமல் விதிவிலக்களிக்க விரும்புகிருேம். ஒரு சிறிய மாற்றத்துடன் குறைந்தபட்ச அழுத்த மின்சாரத்தை உபயோகிக்கும் சிறு தொழில் நிறுவனங்களைப் பொறுத்த வரை இக்கோரிக்கை ஏற்கப்படும்.

எந்தவித தங்குதடையுமின்றி தாராளமாக மின்சாரசப்ளை விரைவில் செய்ய முடியும்.

சிறு தொழில்களுக்கும் மற்றும் இதர பிரிவு தொழில்களுக்குமான நல்ல சூழ்நிலை தமிழகத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. மின்சாரம் கிடைக்க உத்தரவாதம் உள்ளது.

### சிறு தொழில் வளர்ச்சி

தமிழகத்தில் கடந்த சிலவருடங்களாகதொழில் துறையில் அபிவிருத்தி ஏற்படவில்லை என்பது தவருகும்.

1976 — 79, 80-ம் ஆண்டுகளில் தொழில் துறையில் தமிழகம் வளர்ச்சி பெற்றுள்ளது. தொழில் துறையிலும், தொழில்களுக்கான நிதி உதவி மற்ற வசதிகள் செய்து கொடுப்பதிலும் தமிழகம் வேகமாக முன்னேறியுள்ளது. பின்தங்கிய மாவட்டங்களான புதுக்கோட்டை, தென் ஆற்காடு, வட ஆற்காடு மாவட்டங்களில் சிறு தொழில் 100சதவிகிதமும மதுரை, தஞ்சை திருச்சி, கன்னியாகுமரி மாவட்டங்களில 50 சதவிகிதமும் வளர்ச்சி அடைந்திருக்கிறது.

புதிதாக சிறு தொழில் ஆரம்பிக்க தடையாக இருந்த பல்வேறு விதிகள் இரண்டரை ஆண்டுகளில் நீக்கப்பட்டு எளிமையாக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டில் புதிதாக தொடங்கப்படும் தொழிற்சாலைகளுக்கு 3 ஆணடு காலத்திற்கு மின்வெட்டிலிருந்து விலக்களிக்கும் திட்டம் பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினர்.

### அமைச்சர் கே. ஏ. கே.

குத்துவிளக் கேற்றி வைத்து கண்காட்சியை துவக்கிய அமைச்சர் கே. ஏ. கே. பேசுகையில் கூறியதாவது:

தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சியை காணும் வகையில் இந்த கண்காட்சியில் 150 அரங்குகள் அமைக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் வளர்ந்துள்ள தொழில்நுட்ப முறைகளைக் காணமுடியும்.

பெருந்தொழில், சிறிய தொழில், ஊரகத்தொழில் அரங்குகள் இருக்கின்றன.

### காந்திய வழியில் ஊரக வளர்ச்சி

இந்தியா கிராமங்களிலே வாழ்கிறது என்ருர் மகாத்மாகாந்தி. அவர் வழியில் ஊரக வளர்ச்சி திட்டம் நடைபெற்று வருகிறது. 2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நமக்கே உரியதானது கைத்தொழில்.

விவசாயத்திற்கு அடுத்தபடியாக நெசவுக்கு முதன்மைதந்துவருகிருேம். அதற்கடுத்து தோல் தொழில் உள்ளது.

### மறு மலர்ச்சி

இந்தியாவில் 400 தோல் தொழிற்சாலைகள் இருந்தால் அதில் 300 தொழிற்சாலை தமிழகத்தில் இருக்கிறது.

கிராமப்புறங்களில் சமூக பொருளாதார மறுமலர்ச்சியை உருவாக்க புரட்சித்தலைவர் முயன்று கொண்டிருக்கிருர்.

புதிய தொழில்களுக்கு லைசென்ஸ் வழங்குவதில் இருந்த சிலவிதிமுறைகளை சுலபமாக்கி இருக்கிருர்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. கூறினர்.

### அமைச்சர் ஆர். எம். வீ.

தொழில் முனைவோர் குறிப்பேட்டை வெளியிட்டு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசுகையில் கூறியதாவது:—

சிறுதொழிலுக்கு இன்று ஏற்பட்டிருக்கும் தேவைகளை எடுத்துக்கூறினுர்கள். அது வளர, வாழ இந்தப் பொருட்காட்சி உதவும்.

கோடிக்கணக்கில் முதலீடு செய்து ஆயிரக்கணக்

(...ம் பக்கம் பார்க்க)

## முதல்வர் தலைமையில் அமைச்சரவை கூட்டம்

சென்னை, செப். 28— தமிழ்நாடு அமைச்சரவைக் கூட்டம் இன்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் நடந்தது.

தலைமைச் செயலகத்தில் நடந்த இந்தக் கூட்டத்தில் அமைச்சர்கள் அனைவரும் கலந்து கொண்டனர்.

தமிழக அரசின் தலைமைச் செயலாளர் திரவியம் மற்றும் பல உயர் அதிகாரிகளும் இந்த கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

பல்வேறு முக்கியமான விஷயங்கள் குறித்து இந்த கூட்டத்தில் ஆலோசனை நடந்தது.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

கணேசன் குடிப்பழக்கம் உள்ளவர் என்றும் தெரிய வந்துள்ளது.

நேற்று முன்தினம் மேரியை கணேசன் ரோட்டில் வைத்து தாக்கியதாகக் கூறப்படுகிறது.

நேற்று மதியம் கணேசனுக்கும், மேரிக்கும் தகராறு ஏற்பட்டதாம்.

இதனுல் மனம் உடைந்த மேரி நேற்று மாலை தன் உடம்பில் மண்எண்ணை ஊற்றி தீ வைத்துக் கொண்டார். படுகாயமடைந்த மேரி கீழ்ப்பாக்கம் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு அங்கு இறந்து விட்டார்.

இந்தத் தகவலறிந்த தி. மு. க. வினர் மேரியின் பிணத்தையும் தங்களது அரசியலுக்குப் பயன்படுத்திக் கொண்டார்கள். கருணநிதியை விடுதலை செய்யக்கோரி மேரி தீக்குளித்ததாகவும். தீக்குளித்த போது கலைஞர் வாழ்க என்று மேரி முழக்கமிட்டதாகவும் தி.மு.க.பத்திரிகைகள் சரடு விட்டிருக்கின்றன.

குடும்பத் தகராறு காரணமாகத் தற்கொலை செய்துகொண்ட மேரியும், அவரது தந்தை ராயப்பன், தாயார் இரத்தினமேரி, தம்பி ஏசு ஆகியோர் அனைவரும் அனைத்திந்திய அண்ணு திராவிடமுன்னேற்ற கழகதின் உறுப்பினர்கள் என்று 43-வது வட்ட கழகச் செயலாளர் இரா. தாமோதரன் அறிவித்துள்ளார்.

## வேதாரண்யம் அருகே எண்ணை சுத்திகரிப்பு ஆலை: முதல்வர் கோரிக்கை

**சென்னை, செப். 28- பெட்ரோல் ஊற்று கண்டு பிடிக்கப்பட்டு இருக்கும் வேதாரண்யம் அருகிலேயே எண்ணை சுத்திகரிப்பு ஆலையை அமைக்கும்படி மத்திய அரசை முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டுக்கொண்டுள்ளார்.**

**இப்படி அமைப்பதன் மூலம் தொழில் துறையில் பின்தங்கியுள்ள தஞ்சை மாவட்டம் வளரும். வேலை வாய்ப்பும் கிடைக்கும் என்றும் முதல்வர் தெரிவித்துள்ளார்.**

வேதாரண்யம் பகுதியில் பெட்ரோல் ஊற்றைக் கண்டுபிடித்த நிபுணர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர்பாராட்டு தெரிவித்துள்ளார்.

தஞ்சை மாவட்டத்தில் வேதாரண்யம் கடற்கரை அருகே புதிதாக பெட்ரோல் ஊற்று கண்டு பிடிக்கப்பட்டு இருப்பது தெரிந்ததே.

வேதாரண்யம் பகுதியில் பெட்ரோல் ஊற்று கண்டு பிடிக்கப்பட்டு இருப்பது பற்றி முதல்வர் புரட்சித் தலைவர் மகிழ்ச்சி தெரிவித்துள்ளார்.

இது குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது;-

பல ஆண்டுகளாக காவிரிப் படுகையில் எண்ணெய்வளம் இருப்பதாக நாம் சொல்லி வந்துள்ளோம்.

### கனவு உண்மை ஆகிவிட்டது

இப்படி நாம் கூறி வந்தது, நாம் கண்ட கனவு இப்போது உண்மையாகி விட்டது.

முதல் எண்ணைக் கிணற்றைக் கண்டு பிடித்திருக்கும் எண்ணை எரிவாயு கமிஷன் நிபுணர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் எனது பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த எண்ணை ஊற்றுக் கண்டுபிடித்து இருப்பது பொதுவாக தென்னகத்திற்கு குறிப்பாக தமிழகத்திற்கு மிக முக்கியமானது ஆகும்.

பம்பாய் கடல் எண்ணைக் கிணற்றை விட காவிரி படுகைகிணற்றில் எண்ணை அதிகம் கிடைக்கும் என்பது மிகப் பெரிய பொருளாதாரமுன்னேத்திற்கு அடிகோலுவதாக இருக்கும்.

மேலும் தொடர்ந்து இப்படி எண்ணை கண்டுபிடிப்பு சோதனைகளை தமிழகத்தில் நடத்த வேண்டும் என்று தமிழக அரசு விரும்புகிறது.

தொழில் துறையில் பின் தங்கிய நிலையில் தஞ்சை இருக்கிறது. தஞ்சை மவாவட்டத்துககும், அண்டை மாவட்டங்களுக்கும் பெட்ரோல் ஊற்றும், தொழில்களும் அதிகவேலை வாய்ப்புகளைஏற்படுத்தும்.

வேதாரண்யம் பகுதியில் கிடைக்கும் கச்சா எண்ணையை சுத்திகரிக்கும் தொழிற்சாலையை தமிழகத்திலேயே அமைக்க வேண்டும் என்று மத்திய அரசைக் கேட்டுக்கொள்கிறேன்.

பெட்ரோல் கிடைக்கும் இடத்திற்கு அருகிலேயே சுத்திகரிப்பு தொழிற்சாலையை அமைப்பதுதான் சிக்கனமாக இருக்கும்.

இதன் மூலம் உள்ளூர் மக்களுக்கு வேலை வாயப்பும் அதிகமாக கிடைக்கும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

### புதுவையில் கழகத்தின் சார்பில்

## ஆயிரம் பேர்களுக்கு சமபந்தி போஜனம்

பாண்டிச்சேரி, செப். 28- புதுவையில் கழகத்தின் சார்பில் ஆயிரம் பேர்களுக்கு சமபந்திபோஜனம் இன்று வழங்கப்பட்டது.

புதுவை அரியாங்குப்பத்தில் நடந்த சமபந்தி போஜனவிழாவில் புதுவை மாநில செயலாளர் பி.கே. லோகநாதன் சிறப்பு அழைப்பாளராகக் கலந்துகொண்டார். அனைத்து மதத்தினரும் இந்த விழாவில் கலந்து கொண்டனர்.

கடற்கரை ஓரமக்களுக்கு

# பாதுகாக்கப்பட்ட குடிநீர்: அமைச்சர் எஸ்.டி.எஸ். தகவல்

செம்பனார்கோயில், செப். 28—கடற்கரை ஓர மக்களுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதி செய்துதரப்படும் என அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

வருவாய்த்துறைஅமைச்சர் எஸ்.டி.எஸ். தஞ்சை மாவட்டம், செம்பனார் கோயில்ஒன்றியத்திலுள்ள காருகுடி ஊராட்சிஒன்றிய புதிய பள்ளிக்கட்டிடத்தைத் திறந்து வைத்தார். ரூபாய் 43 ஆயிரம் செலவில் கட்டப்பட்டுள்ள இப்பள்ளிக் கட்டிடத் திறப்பு விழாவில் சட்டமன்ற உறுப்பினர் விஜயபாலன் மக்கள் குழு உறுப்பினர் கோவி. நாராயணசாமி, தம்பி பாலவேலாயுதம், கொள்ளிடம் முனுசாமி மற்றும் பலர் பங்கேற்றனர். இவ்விழாவில் மூன்று நபர்களுக்கு வீட்டுமனைப் பட்டாவும், இலவசமாக இரண்டு நபர்களுக்குப் பூச்சிமருந்து தெளிப்பானும் வழங்கப்பட்டன.

அமைச்சர் எஸ் டி.எஸ். பேசுகின்ற போது கூறியதாவது:-

தன்னிறைவுத் திட்டத்தின் மூலமாக கிராம மக்களின் கோரிக்கைகள் பெரும்பாலும் விரைவில் நிறைவேற்றப்படும்.

## ஆசிரியர்களின் கடமை

மேலும், விஞ்ஞான வளர்ச்சி ஆகியவற்றிற்கு இன்றுள்ள பள்ளி மாணவர்களே பொறுப்பு ஆகும். அதை மாணவ மணிகள் மனதில் கொண்டு நன்கு படித்து முன்னேற வேண்டும். கிராமங்களில் கல்வி பயிலும் மாணவர்களின் பெற்றோர்கள் பெரும்பாலோர் கல்வி அறிவு இல்லாத காரணத்தால மாணவர்களுக்குக் கல்வி கற்றுத்தர இயலாதவர்களாக இருக்கிறார்கள். ஆகையால் ஆசிரியர்கள் தான் மாணவர்களைத் தங்கள் குழந்தைகள்போல் எண்ணிகலவி கற்றுத் தர வேண்டும் என்று ஆசிரியர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அதே நேரத்தில் ஆசிரியர்கள் கடமைக்காக பணியாற்றுது நாளைய சமுதாயத்தை உருவாக்கும் பணி நம்மிடம் உள்ளது என்று கருதி எங்களைவிட அதிகமாக நல்லமுறையில் வாழ்க்கையில் அம்மாணவர்களை உயர்த்த வேண்டியது ஆசிரியர்களது கடமையாகும்.

## சாதிமத பேதமின்றி

கடற்கரையோர மக்களுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதி செய்து தரப்படும். சாதிமத பேதமின்றி ஆதி திராவிடமக்களுக்கும் இந்த மேல்நிலை நீர் தேக்கத்தொட்டிகளின் மூலம் பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் வசதி செய்து தரப்படும்.

இவ்வாறு எஸ். டி. எஸ். கூறினார்.

மேலும்வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். அவர்கள் நல்லாரைக் கிராமத்தில் கழகக் கொடிகளை ஏற்றி வைத்தார்.

சங்கரன்பந்தல் என்ற ஊரிலுள்ள அரசினர் உயர்நிலைப் பள்ளி வகுப்புகள் நடத்தஇயலாத அளவுக்கு பழுது அடைந்துள்ள கட்டிடங்களை அமைச்சர் பார்வையிட்டு தக்க நடவடிக்கை எடுக்கும்படி உத்தர விட்டார்.

தமிழ்ப்பல்கலைக் கழகம்:

# புரட்சித் தலைவருக்கு ஆசிரியர்கள் பாராட்டு

திருச்சி, செப். 28—தமிழர்களின் பெருமையை உலகறியச் செய்யும் வகையில் தமிழ்ப்பல்கலைக் கழகத்தை தஞ்சாவூரில் ஏற்படுத்தியதற்கு முதல்வர் புரட்சித் தலைவருக்கு தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் இணைப்பு இயக்கத்தின் சார்பில் மாநிலத் துணைச் செயலாளர் ஆர். ஜி. துரைராஜு, மாவட்டத் தலைவர் அந்தோணிசாமி ஆகியோர் பாராட்டுத் தெரிவித்திருக்கிறார்கள்.

டாக்டர் ராஜாசர் அண்ணாமலை செட்டியார்

# 101-வது பிறந்த நாள்விழா

சென்னை, செப். 28—டாக்டர் ராஜாசர் அண்ணாமலைசெட்டியாரின் 101-வது பிறந்த நாளை முன்னிட்டு நாளை (30ந் தேதி) மாலை 6 மணிக்கு ராணி சீதை ஹாலில் விழா நடைபெற இருக்கிறது. டாக்டர் சாந்தப்பா (துணைவேந்தர் சென்னை பல்கலைக்கழகம்) தலைமையில் டாக்டர் வெங்கட சுப்ரமணியம் (கல்வி இயக்குனர்), எம்.எஸ்.மெய்யப்பன், ஆகியோர் "டாக்டர்ராஜா சர் அண்ணாமலை பிறந்தநாள்" சொற் பொழிவாற்றுவார்கள். மாலை 7 மணியளவில் 'சொல்லடி சிவசக்தி' நாடகம் நடைபெறுகிறது.

இவ்வாறு ராஜா சர் அண்ணாமலை செட்டியார் மெமோரியல் டிரஸ்ட் தலைவர் தெரிவித்துள்ளார்.

## பேச்சாளர் முகவரி

கோபி தமிழரசு
இராமன் நகர் (அஞ்)
மேட்டூர் அணை-3

சேலத்தில் நடைபெற்ற அரசு பொருட்காட்சி நிறைவு விழாவில் சிறந்த அரங்குகளுக்கான பரிசினை அமைச்சா ஆர். எம. வீ. வழங்கினார்.

மெல்பேர்னில்

# காமன்வெல்த் மாநாடு: பாதுகாப்பு தீவிரம்

மெல்பேர்ன், செப். 28. இங்கிலாந்து நாட்டின் ஆளுகைக்கு உட்பட்டு பிறகு விடுதலையடைந்த நாடுகள் "காமன்வெல்த்" கூட்டமைப்பின் கீழ் கூடி தங்களுக்குள் உள்ள பிரச்சினைகளை பேசுவது வழக்கம்.

இந்த ஆண்டு காமன் வெல்த்மாநாடுஆஸ்திரேலியாவின் மெல் பேர்னில் நடக்கிறது. இதை ஒட்டி பல நாடுகளின் தலைவர்கள் அங்கு வர உள்ளதால் பாதுகாப்பு ஏற்பாடுகள் தீவிரமாக செய்யப்பட்டுள்ளன.

இந்த மாநாட்டில் கலந்துகொள்ள பிரதமர் இந்திரா நாளைமெல்பேர்ன் செல்லுகிறார்.

# ஆலங்குளத்தில் சிமெண்ட் தகடு தொழிற்சாலை

மதுரை, செப். 28—ராமநாதபுரம் மாவட்டம், ஆலங்குளத்தில், தமிழ்நாடு சிமெண்ட் கார்ப்பரேஷன் சார்பில், அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடு தயாரிப்புத்தொழிற்சாலை ஒன்று துவக்கப்படும் எனஅக்கார்ப்பரேஷன் நிர்வாகடைரக்டர் பவுல்ராஜ் தெரிவித்தார்.

இத்தகைய தொழிற்சாலை மாநிலத்தில் அரசுத் துறையில் அமைக்கப்படுவது இதுவேமுதல்தடவையாகும்.

இத்தொழிற்சாலை மூலம் ஆண்டுக்கு 36 ஆயிரம் டன் சிமெண்ட் தகடுகள் உற்பத்தி ஆகும் எனவும் எதிர்ப்பார்க்கப் படுகிறது.

# பண்ருட்டி தகவல்..

(1ம்பக்கத் தொடர்ச்சி)

காணவர் பணியாற்றும் தொழில்தான் தேவை என்ற எண்ணத்தை நாம் வளர்த்துக் கொண்டிருக்கிறோம்.

## சிறு தொழில் வளர்ச்சி

இந்தியா போன்ற நாடுகளில் நாம் கிராமங்களில் உருவாக்கும் முயற்சிதான் நாட்டை முன்னேற வைக்கும்என்று காந்தியடிகள் கூறினார்.

கடந்தபல ஆண்டுகளாக சிறு தொழில்களை அரசாங்கம் ஒதுக்கி வைத்திருந்தது போலிருந்தது. கடந்த மூன்றாண்டுகளில் முதல்வர் புரட்சித்தலைவர் அரசு சிறு தொழில் வளர்ச்சிக்கு முயற்சி எடுத்துள்ளது.

இந்திய அரசும் சில ஆண்டுகளாக சிறு தொழில் வளர்ச்சிக்கு தேவையான நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது. தொழிலதிபர்கள் சிறு தொழில் வளர்ச்சியில் அக்கறை காட்ட வேண்டும்.

இந்திய அரசும், தமிழக அரசும் பின் தங்கிய பகுதிகளாக அறிவித்துள்ள பகுதிகளில் தொழில்களைத் துவக்க வேண்டும்.

தொழில்களைத் துவக்குபவர்கள் சில காரியங்களை செய்கிறார்கள்.

புதுக்கோட்டையில் தொழில் துவங்கினால் அரசு சலுகைகளை அளிக்கிறது. ஆனால் தொழிலை துவக்குபவர்கள் திருச்சியிலிருந்து5,6கிலோமீட்டரில் துவக்குகிறார்கள். அங்கே புதுக்கோட்டை மாவட்ட எல்லை ஆரம்பமாகிறது. ஆனால் தொழிற்சாலை, தொழிலாளர்கள், பயன் எல்லாம் திருச்சிக்கு சேருவது போல ஆகிவிடுகிறது.

மாவட்டத்தின் உட்பகுதியில் தொழிற்சாலை அமைத்தால் ரயில் வசதியில்லை என்கிறார்கள்.

சிறுதொழில் அதிபர்கள் அமைப்பு ஆராய்ந்துஅதற்கான குறைகளை, யோசனைகளை அரசுக்கு சொல்ல வேண்டும். கிராமப்புறத்தில் துவக்குவதற்கு தேவையான அடிப்படை வசதிகள் என்ன என்பதை தெளிவாக திட்டமாக மாநில அரசுக்கு அ[illegible] வேண்டும்.

## கிராமங்களில் தொழில்கள்

தொழில்கள் ஒரே இடத்தில் குவியுமானால் எண்ணங்கள் நிறைவேறாமல் போய்விடும். கிராமப் புறங்களில் தொழில்கள் அமைக்கப்பட வேண்டும் என்ற முயற்சியில் இந்த சங்கம் ஈடுபடவேண்டும்.

படித்துவிட்டு வேலையற்ற பட்டதாரிகள் என்கிறார்கள். வேலையற்ற பட்டதாரிகள் என்பதா? வேலை தெரியாத பட்டதாரிகள் என்பதா?

மனிதன் தன்னை சமுதாயத்திற்கு அறிவிக்கத்தான் பட்டம். தன்னை காப்பாற்றிக் கொள்ள, தொழில் கற்றுக்கொள்ளவேண்டும். கையெழுத்துப் போடத் தெரியாத தகப்பன பிள்ளையை பட்டதாரியாக படிக்க வைக்கிறார். அது எப்படி முடிகிறது?

இந்த நாட்டு இளைஞர்களை தொழிலில் ஈடுபட செய்யும் வகையில் சங்கம் செயல்பட வேண்டும்.

## இளைஞர்கள் கற்க வேண்டியது

விடுதலைப் போராட்டக் காலத்திலேயே காந்தியடிகள்நிர்மாணத்திட்டங்களை தந்தார். உலகில் வேறு எந்த தலைவரும் தந்ததில்லை.

பட்டம் பெருத தச்சர் ஒருநாளைக்கு 200 ரூபாய் சம்பளத்திற்கு குவைத் நாடு செல்கிறார். பட்டம் பெருத கொத்தனார் ஒரு நாளைக்கு 150 ரூபாய் சம்பாதிக்க வெளிநாடு செல்கிறார். படித்து பட்டம் பெற்றவன் சுற்றிக்கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட இளைஞர்கள் தங்களுக்கென்றுஒருதொழிலைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

சிறு தொழில் என்றில்லாமல் இதுதான் இந்த நாட்டின் உயிர்த்தொழில் என்ற வகையில் தொழிலை வளர்க்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

## அமைச்சர் திருநாவுக்கரசு

வெள்ளிவிழா மலரை வெளியிட்டு அமைச்சர் திருநாவுக்கரசுபேசுகையில் கூறியதாவது:—

இந்தியாவிலேயே, பின் தங்கிய பகுதிகளில் தொழில் துவங்கும் மாநிலங்களில் தமிழகம் முன்னணியில் நிற்கிறது. கடந்த 2 ஆண்டுகளில் 5 கோடி ரூபாய் முதலீடு பெற்றுத் தந்திருக்கிறோம்.

நிதியமைச்சரும் மின் துறை அமைச்சரும் ஊரக தொழில் அமைச்சரும் நானும் இலாகா அதிகாரிகளும் சேர்ந்து ஆலோசனை நடத்தினோம். அந்த ஆலோசனையின்போது சிலவற்றை அறிவிக்கலாமா என்று முடிவெடுத்தோம்.

## அரசு சலுகை

புதிய தொழிற்சாலைக்கு வட்டியில்லாத கடனுக அளிக்கப்படும்விற்பனைவரித் தொகையை அதிகரிக்கலாமா? ஒரு கோடி ரூபாய் வரம்பு வைக்கலாமா என்று யோசனை செய்தோம்.

நமக்குத் தேவையான மின்சாரத்தை நாமே தயாரித்துக் கொள்ள வழி செய்ய வேண்டும் என்றும் ஆலோசனை செய்தோம்.

எந்ததொழில் துவங்கினாலும் துவங்கிய 5 ஆண்டிற்கு மின்வெட்டு கிடையாது என அறிவிக்க இருக்கிறோம்.

பின்தங்கிய பகுதியாக அறிவிக்கப்பட்டுள்ளபகுதிகளில் தொழில் துவங்குபவர்களுக்கு எல்லாவித சலுகையும் உண்டு என அறிவித்திருக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

வெள்ளிவிழா துவக்கத்தில் சங்கத்தலைவர் வி. எஸ். நரசிம்மன் அறிக்கை படித்தார். கே.ஆர்-மோதிலால் வரவேற்புரையாற்றினர்.

தியாகராசன் நன்றி கூறினார்.

தமிழர் போர்வையில்

# பொதுச் சொத்துக்கு பங்கம் விளைவிக்கும் சமூகவிரோதிகள்

## மதுரை மேயர் பாலகிருஷ்ணன் கண்டனம்

மதுரை, செப் 28. தமிழர் என்ற போர்வையில் பொதுச் சொத்துக்களுக்கு சேதம் விளைவிக்கும் சமூக விரோதிகளின் வன்முறைகளுக்கு மதுரை மேயர் பாலகிருஷ்ணன் கண்டனம் தெரிவித்திருக்கிறார். இவர்களை பொதுமக்கள் இனம் கண்டு கொண்டு போலீசாரிடம் பிடித்துக்கொடுக்க வேண்டும்என்றும் பாலகிருஷ்ணன் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

இலங்கை தமிழர்களுக்கு ஆதரவு என்ற பெயரால் தி. மு. க.வினர் தமிழகத்தில் அராஜக செயல்களில் ஈடுபட்டு வருகிறார்கள்.

இதுகுறித்து மதுரை மாநகராட்சி மேயர் பாலகிருஷ்ணன் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

சில தினங்களாக தமிழகத்தில் சில இடங்களில் குறிப்பாகமதுரை போன்ற முக்கிய நகரங்களில் அரசியல் காரணங்களைகாட்டி சிலர் சமூக விரோத செயல்களில் ஈடுபட்டு வருகிறார்கள். கடைகளை அடைக்கச் சொல்வதும், மக்களின் அத்தியாவசிய பொருட்களை வாங்க தடையாக இருப்பதும், பஸ்களை கொளுத்துவதும் அநாகரீகச் செயல்கள் ஆகும்.

## அண்ணாவின் தத்துவத்தை அழித்து...

பேரறிஞர் அண்ணாவின் தத்துவத்தையே அழித்து [illegible]ன்றைய தினம் தமிழன் என்கிற போர்வையில் பொதுச் சொத்துக்களுக்கு சேதம் விளைவித்துக் கொண்டு வருகிறார்கள்.

இந்த சமூக விரோதிகளை பொதுமக்கள் அடையாளம் கண்டு கொள்ள வேண்டும். இந்த வன்முறையாளர்களை போலீசாரிடம் பிடித்துக் கொடுத்து அரசுக்கு உதவ வேண்டும்.

இவ்வாறு மதுரை மேயர் பாலகிருஷ்ணன், மற்றும் துணை மேயர் நவநீதகிருஷ்ணன் ஆகியோர் ஒரு அறிக்கையில் கேட்டுக் கொண்டுள்ளனர்.

சென்னை 101-வது வட்டம்

# அண்ணா பிறந்தநாள் விழாவில் அமைச்சர் கே. ஏ. கே.

சென்னை, செப். 28—சென்னை 101-வது வட்டம் ராயப்பேட்டையில் அண்ணா பிறந்தநாள் விழா கொண்டாடப்பட்டது. மாவட்டப்பிரதிநிதி தி. டி. ஈஸ்வர் தலைமை வகித்தார் அமைசசர் கே. ஏ. கே. கலந்துகொண்டு ஆயிரம் பேருக்கு உணவளித்தார். செயலாளர் அல்லாபக்ஷா வரவேற்றார்.

முகம்மது, பாலன், சிவகுமார் குணபாண்டியன் மற்றும் பலர் கலந்து கொண்டு பேசினார்கள்.

மணி நன்றி கூறினார்.

# ஆலந்தூரில் பேரறிஞர் பிறந்தநாள் விழா

சென்னை, செப். 28—ஆலந்தூரில் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள்விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

அப்துல்ரசாக் எம் எல் ஏ அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்.

17-ந்தேதி அய்யா பிறந்தநாளை ஒட்டி எம்.சீனிவாசன் அய்யா சிலைக்கு மாலை அணிவித்தார்.

அண்ணா பிறந்த நாளை ஒட்டி ஆலந்தூர் பகுதியில் 10 இடங்களிலும், ஆதம்பாக்கம் பகுதியில் 10இடங்களிலும் கழகக் கொடி ஏற்றி வைக்கப்பட்டது.

ஆலந்தூர் பெரியார் திடலில் நடந்த கழகப் பொதுக் கூட்டத்தில் டி. கே.கபாலி, அப்துல்ரசாக் ஆண்டாள் ராஜூத் மு. பச்சையப்பன் ஆலந்தூர் பாலன் ஜி. பி. லெனின் மற்றும் பலர் பேசினார்கள். மு.ராமதாஸ் தலைமை வகித்தார்.

## கோபி தமிழரசு நிகழ்ச்சிகள்

செப் 27 சேலம்
28 திருப்புவனம்
29 மதுரை
அக் 4 ராசபாளையம்
5 திருவில்லிப்புத்தூர்
6 வத்திராயிருப்பு
7 திண்டுக்கல்

மீனாட்சிபுரத்தில் இஸ்லாம் மதத்திற்குப் போனவர்கள்

# மீண்டும் இந்து மதத்திற்கு வந்தனர்

நெல்லை, செப். 28—நெல்லை மாவட்டம் மீனாட்சிபுரத்தில் இந்து மதத்தில் இருந்து இஸ்லாம் மதத்திற்கு மதம் மாறிய மூவர் மீண்டும் இந்துமதத்திற்குத் திரும்பியுள்ளனர்.

பீஜாவர் மடத்தைச் சேர்ந்த விசுவநாத தீர்த்த சுவாமிகள் முன்பு இவர்கள் இந்து மதத்திற்கு திரும்பியுள்ளனர்.

முனு ஆதி தலைமையில்

# கழகத் தோழர் திருமணம்

வண்டலூர், செப். 28—காட்டாங் குளத்தூர் ஒன்றியம் ஒட்டேரிவிரிவுப் பகுதி கிளைக் கழகச் செயலாளர் தனசேகரனுக்கும், வெம்புலிக்கும் திருமணம் 30-ந் தேதி ஒட்டேரி விரிவு பகுதியில் விவசாய உயர்மட்டக்குழு தலைவர் முனு ஆதி தலைமையில் காலை 6 மணி அளவில் நடக்கிறது.

மணமக்களை வாழ்த்தி ஜெகத்ரட்சகன், எம். எல்.ஏ., மா.கோவிந்தராசன் அங்குசாமி, ஜெயராமன் செ. து. வரதன் ஆதிகேசவன் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

புதுவை பாரதி மில்

# தொழிற்சங்க நிர்வாகிகள் தேர்தல்

புதுவை, செப். 28. புதுவை பாரதி மில்ஸ் தொழிற்சங்க நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்றது.

தேவராசு கவுரவத் தலைவராகவும், சின்னராசு தலைவராகவும், பாலன் துணைத் தலைவராகவும், முனியன் செயலாளராகவும், அண்ணாமலை துணைச் செயலாளராகவும், ஆறுமுகம் பொருளாளராகவும் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளனர்.



# வடவர்கள் மன்னிப்புக் கேட்பவர்கள்: மக்வானு மீது தி. மு. க. திடீர் பாய்ச்சல்

சென்னை, செப். 28—சென்னை வந்து சென்ற மத்திய அமைச்சர் மக்வானு மீது தி.மு.க. தலைவர்கள் திடீரென்று தாக்குதல்தொடர்ந்தனர். சுகாட்டுமேனிக்கு வடநாட்டவரை தி. மு. க. தலைவர்கள் வெளிப்படையாக தாக்கியுள்ளனர்.

மன்னிப்புக் கேட்பது வடவர்வழக்கம் என்றும கூறியுள்ளனர்.

இப்படி மக்வானு மீது தாக்குதல் நடத்திருப்பவர்கள் தி.மு.க எம்.பி. தண்டபாணி, தி. மு. க. எம். எல். ஏ. நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி ஆகிய இருவரும் ஆகும்.

## வசை புராணம்

சென்னை வந்த மக்வானு கருணாநிதியை விடுதலை செய்ய ஒரு சமரச திட்டத்தை வெளியிட்டதும், அதனை தி.மு.க.வினர் ஏற்க மறுத்ததும் தெரிந்ததே. அதைத் தொடர்ந்து சமரச யோசனை தெரிவித்த மக்வானு மீதே இப்போது தி.மு.க. தலைவர்கள் வசைபுராணத்தில் இறங்கி தாக்கியுள்ளனர்.

"அனைத்திந்திய அண்ணா தி.மு.க.வுக்கும், தி.மு.க.வுக்குமே வித்தியாசம் புரியாத மக்வானு" என்று மக்வானுவை இவர்கள் வர்ணித்துள்ளனர்.

அதோடு இந்த இரு தலைவர்களும் நின்றுவிடவில்லை. ஒரு படி மேலே போய் வட இந்தியர்களை இழிவுபடுத்தும் வகையில் தாக்கியுள்ளனர்.

'மன்னிப்புக் கேட்பது என்பது வேண்டுமானால் வடஇந்தியாவில் பழக்கமாக இருக்கலாம். ஆனால் எங்களுக்கு என்று தன்மானமும், கவுரமும் இருக்கிறது' என்று அறிக்கை வெளியிட்டுள்ளனர்.

மக்வானுவை நேரிடையாகத் தாக்குவதாக நினைத்து வடவரையே இந்த இருவரும் தாக்கி இருப்பது தி.மு.க. வட்டாரத்தில் திடீர் கேள்விக் குறியாக எழுந்துள்ளது.

# இந்தியாவில் கலவரங்களைத் தூண்டிவிட
# வெளிநாட்டினர் சதி

## மத்திய அரசு தீவிர கண்காணிப்பு

புதுடெல்லி, செப். 28- இந்தியாவில் கலவரங்களைத் தூண்டிவிட வெளிநாட்டினர் சதி செய்கிறார்களா என்று சந்தேகம் ஏற்பட்டுள்ளது. இதையொட்டி நாடு முழுவதிலும் மத்திய அரசு பாதுகாபபு ஏற்பாடுகளைப் பலப்படுத்தியுள்ளது.

வன்முறை, அரசியல் கலவரங்களையும் மத்திய அரசு தீவிரமாகக் கண்காணித்து வருகிறது.

இந்தியாவில் கலவரங்களை உருவாக்க வெளிநாடுகள் சதி செய்கிறதா என்ற சந்தேகம் ஏற்பட்டுள்ளது. இதனை ஒட்டி நாடு முழுவதும் மத்திய அரசு பந்தோபஸ்து, ஏற்பாடுகளை பலப்படுத்தியுள்ளது.

இங்குள்ள அந்நிய நாட்டினரையும் அவர்களோடு தொடர்பு கொண்டுள்ளவர்களையும் மத்திய அரசு கண்காணிக்குமாறு உத்திரவிட்டுள்ளது.

### தீவிர நடவடிக்கை

அதோடு கிரிமினல் குற்றவாளிகள் மத உணர்வுகளைத் தூண்டி விடுபவர்கள், மற்றும் வன்முறை அரசியல் கட்சிகளின் நடவடிக்கைகளையும் மத்திய அரசு காண்காணிக்க உத்தரவிட்டுள்ளது.

கொள்ளைகள், நாசவேலை, கொலை, கள்ளக் கடத்தல், பயமுறுத்தல் போன்ற நடவடிக்கைகளின் பின்னணிபற்றியும் ஆராயுமாறு, மத்திய அரசு உத்திரவிட்டுள்ளது.

இப்படிப்பட்டவர்கள் மீது தீவிர நடவடிக்கை எடுக்கும்படி கூறியுள்ளது.

இந்திய எல்லையைக் கடந்துவரும் வெளிநாட்டினரைப் பற்றி கவனிக்குமாறு எல்லைப் பாதுகாப்பு படையினருக்கும், மற்ற ராணுவத்தினருக்கும் கட்டளையிடப்பட்டுள்ளது.

### ஆயுதம் கடத்தல்

கள்ளத்தனமாக தயாரிக்கப்பட்ட ஆயுதங்கள் பற்றியும் கண்காணிக்குமாறு மத்திய அரசு கூறியுள்ளது.

சமூகவிரோத சக்திகள் இத்தகைய ஆயுதங்களைக் கையாள்கிறார்கள்.

இப்படி தயாரிக்கப்பட்ட ஆயுதங்களில் 10 சதவிகிதம்தான் பிடிபட்டுள்ளது. மீதி 90 சதவிகித ஆயுதங்கள் சமூக விரோதிகளிடம் இருக்கிறது. இதையும் கண்டுபிடிக்குமாறு மத்திய அரசு உத்தரவிட்டுள்ளது.

## வடபழனியில் இன்று மாலை ஜேப்பியார் பேசுகிறார்

சென்னை, செப். 28- சென்னை வடபழனி சிங்காரவேலர் திடலில் 111-வது வட்டக் கழகத்தின் சார்பில் மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

சு. சண்முகம் தலைமையில் மாவட்ட செயலாளர் ஜேப்பியார் எம். எல். சி, துணைச்செயலாளர் கு. க. செல்வம், திருவை அண்ணாமலை, தி. நகர் மூர்த்தி, கே. தட்சிணா மூர்த்தி ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

## கோமேனியை எதிர்த்து ஈரானில் துப்பாக்கிச் சண்டை

### பலபேர் சாவு, பஸ்கள் தீக்கிரை

லண்டன், செப். 28— ஈரானில் அயதுல்லா கோமேனியின் ஆட்சியை எதிர்த்து அரசாங்க படையினருக்கும் எதிர்ப்பாளர்களுக்கும் துப்பாக்கிச் சண்டை மூண்டுள்ளது நேற்றைய கலவரத்தில் 10பேர் கொல்லப்பட்டனர். பஸ்கள் மற்றும் பெரிய கட்டிடங்கள் தீவைத்துக் கொளுத்தப்பட்டன.

ஈரானில் முஸ்லிம் மதத் தலைவர் அயதுல்லா கோமேனிக்கு நாளுக்கு நாள் எதிர்ப்பு வளர்ந்து வருகிறது. அயதுல்லா கோமேனியையும் அவரது ஆட்களையும் இடதுசாரி படையினர் அழித்துவிடத் திட்டமிட்டு உள்ளனர்.

அதிபர் பானிசதார் பதவியில் இருந்து நீக்கப்பட்டதும், இந்த எதிர்ப்பு மேலும் அதிகரித்தது.

### உள்நாட்டுப் போர்

ஆட்சியைக் கவிழ்க்கும் எண்ணத்துடன் கலவரம் செய்தததாக எதிர்ப்பாளர்களை, பெரும்பாலும் பானிசதார் ஆட்களையும் அதிகாரிகளையும்கோமேனி ஆட்சி மரணதண்டனை விதித்து சுட்டுத்தள்ளி வருகிறது. எதிர்ப்பாளர்களும் சளைக்காமல் பார்லிமெண்ட் கட்டிடம். மதத் தலைமையகம், பிரதமர் அலுவலகம் ஆகிய இடங்களில் வெடிகுண்டுகள் வைத்துத் தகர்த்து வருகிறார்கள்.

இந்தச் சம்பவங்களைத் தொடர்ந்து நேற்று டெகரானிலும், இதர நகரங்களிலும் பயங்கர உள்நாட்டுப் போர் மூண்டது.

கோமேனியின் படையினருக்கும் எதிர்ப்பாளர் இடதுசாரியினருக்கும் துப்பாக்கிச் சண்டை நடந்தது.

இரண்டு படையினரும் பயங்கரமாக துப்பாக்கியால் சுட்டுத் தாக்கிக் கொண்டனர். எதிர்ப்பாளர்கள் பஸ்களுக்கு தீவைத்துக்கொளுத்தினர். பெரிய கட்டிடங்களுக்கும் தீவைக்கப்பட்டது.

துவக்கத்தில் இடதுசாரியினரான முஜாஇதீன் கும்பல் மீது கோமேனியின் ஆட்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததாகக் கூறப்படுகிறது.

டெகரானின் முக்கிய சாலையான இங்கலாப்சாலையில் துப்பாக்கிச் சண்டை பயங்கரமாக நடந்ததாகவும் பின்னர் பல சாலைகளுக்கு சண்டை பரவியதாகவும் லண்டனில் இருந்து வந்த செய்தி ஒன்று கூறுகிறது.

இந்தக்கலவரத்தில்பலர் கொல்லப்பட்டனர். கோமேனியின் அரசு எதிர்ப்பவர்களை நடுரோட்டில் நிறுத்திகொலைசெய்து வருகிறது. கடந்தவாரம் 34 பேர்களை அது சுட்டுக் கொன்றது. நேற்று 22 எதிர்ப்பாளர்கள் மரண தண்டனை விதிக்கப்பட்டு சுட்டுக் கொல்லப்பட்டதாகவும் ஈரான ரேடியோ அறிவித்தது.

இப்படி எதிர்ப்பாளர்கள் கொல்லப்பட்டு வருவதைத் தொடர்ந்து ஈரானில உளநாட்டுப போர் மிகபயங்கர அளவில் மூண்டிருக்கிறது.

தலைநகர் டெல்லியில்

## ரூ. 150க்கு போலி டாக்டர் பட்டம் விற்றவர் கைது

டெல்லி, செப். 28— கத்தரிக்காய் விற்பது போல ரூ.150க்கு டாக்டர் பட்டங்களை விற்ற நபரை போலீசார் கைது செய்துள்ளனர்.

இந்த நபர் ஆயிரக்கணக்கான போலியான ஆயுர்வேதப் பட்டங்களை விற்று இருக்கிறார்.

இவரது வீட்டில் இருந்து பல ஆயிரம் போலி சான்றிதழ்களையும் போலீசார் கைப்பற்றி இருக்கிறார்கள்.

இவரது பெயர் ஓம் பால் ஆர்யா. 30 வயதான இந்த நபர் "கலா சம்ஸ்கிருதி சாகித்ய ஆயுர்வேதிக் வித்யா பீடம்" என்ற பெயரில் ஒரு அமைப்பு இருப்பதாக பெயரிட்டு மோசடி செய்து இருக்கிறார்.

ரூ. 150க்கு இந்த போலி சான்றிதழ்களை விற்று இருக்கிறார்.

ரூ. 250 கொடுத்த ஒருவர் கொடுத்த புகாரின் விளைவாக ஆர்யா சிறையில் அடைக்கப்பட்டுள்ளார்.

## சிமெண்ட் வினியோகம்: அரசு உத்தரவு

சென்னை, செப். 28— சட்டமன்றப் பேரவையில் விவாதத்தின் போது உறுப்பினர் ஒருவர் ஊராட்சி ஒன்றியங்களில் சிமெண்ட் விநியோகம் பற்றிய விவரங்களை பார்வைக்கு வைத்தால் ஒன்ருக இருக்கும் என்றும் கூறியிருந்தார்.

இந்த ஆலோசனையை அரசுகவனமாக பரிசீலித்து சிமெண்ட் பெற அனுமதிச் சீட்டு கோரி ஒவ்வொரு நாளும் பெறப்படும் விண்ணப்பங்களின் விவரத்தை அந்தந்த நாளில்தினமும்அறிவிப்புப் பலகையில் வெளியிட வேண்டும் என்று எல்லா மாவட்ட ஆட்சியாளர்களுக்கும் அறிவுரை வழங்கியுள்ளது.

ஒவ்வொரு விண்ணப்பங்களில் எவ்வளவு சிமெண்டுக்கு அனுமதிச் சீட்டுகள் வழங்கப்பெற்றன என்ற விவரங்களும் அவ்வப்போது அறுவிப்பு பலகையில் வெளியிட வேண்டும் என்று அரசு ஆணையிட்டுள்ளது.

## ஆதிதிராவிடர்களுக்கு தனியார் துறையிலும் இட ஒதுக்கீடு

### மத்திய அரசு முடிவு

புதுடெல்லி, செப். 28— பொதுத்துறை மற்றும் அரசு நிறுவனங்களைப் போல தனியார் துறை நிறுவனங்களிலும் ஆதிதிராவிடர் மற்றும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இட ஒதுக்கீடு செய்ய மத்திய அரசு முடிவு செய்துள்ளது

மத்திய மாநில அரசு அலுவலகங்கள், மற்றும் பொதுத்துறை அரசு நிறுவனங்களில், ஆதிதிராவிடர்களுக்கும் இதர தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் வேலை கொடுப்பதில் இட ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. தாழ்த்தப்பட்டவர் மற்றும் மலை ஜாதியினர் ஆகியோருக்கு வேலை வாய்ப்பில் இத்தனை சதவிகிதம் என்று ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

இந்தஒதுக்கீடுதிட்டத்தை இப்போது தனியார் நிறுவனங்களுக்கும் விஸ்தரிக்க மத்திய அரசுமுடிவு செய்துள்ளது. பொதுத்துறை தனியார்த்துறை ஆகிய இரண்டு துறைகளிலும் "சி" மற்றும் "டி" வகுப்பு வேலைகளிலும் ஆதிதிராவிடர்களுக்கு இட ஒதுக்கீடு செய்யஅரசு முடிவு செய்துள்ளது.

### மாநில அரசுகளுக்கு தாக்கீது

வேலைவாய்ப்புகளைமுறையானபடி நடைமுறைப் படுத்தஆவனவற்றைக்கண்டறியுமாறு நியமிக்கப்பட்ட மாத்யு (மத்தேயு) குழுவின் சிபாரிசுகளின் அடிப்படையில் மத்திய அரசு இவ்வாறு முடிவு செய்துள்ளது.

வேலைவாய்ப்பு அளித்து வேலை தேடித்தரும் துறையை மாநில அரசுகள் நிர்வகித்து வருவதால் இந்த இட ஒதுக்கீடு திட்டத்தை அமுல்படுத்தும்படி மத்திய அரசு மாநில அரசுகளுக்கு தாக்கீது அனுப்பயிருக்கிறது.

ஆதிதிராவிட மக்கள், மற்றும் தாழ்த்தபபட்ட பிரிவுகளைச் சேர்ந்தவர்களுக்கு அவர்கள் எநதத் துறையில் மிக எளிதாக வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுவாரகள் என்பன போன்ற விவரங்களை எலலாம் மாநில அரசு வேலைதேடித்தரும் நிறுவனங்கள் ஆதிதிராவிட மக்களுக்கு ஆலோசனை கூறவேண்டும் என்றும் மத்திய அரசு மாநிலஅரசுகளைக்கேட்டுக் கொண்டுளளது.

வீட்டு வசதி வாரியத் தலைவர்

## வேலூர் நாராயணனுக்கு ஊழியர்கள் பாராட்டு

சென்னை, செப். 28— வீட்டு வசதி வாரியத் தலைவராகப் பொறுப்பு ஏற்றுள்ள வேலூர் நாராயணனுக்கு வீட்டுவசதிவாரிய அண்ணா தொழிலாளர்கள், ஊழியர்கள் சங்கம் பாராட்டு தெரிவித்துள்ளது.

சங்கத் தலைவர்கள் வி.ஜே.பிரான்சிஸ், ஆர். சாமிநாதன், வி. அமல் ராஜ் ஆகியோர் வேலூர் நாராயணனுக்கு மாலை அணிவித்து சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களை தெரிவித்தனர்.

## பெரியகுளம் கழக நிர்வாகிகள் கூட்டம்

மதுரை, செப். 28— மதுரை மாவட்டம் பெரிய குளம் நகர் கழக வட்டச் செயலாளர், மேலமைப்பு பிரதிநிதிகள் ஆகியோர் கூட்டம் அடுத்த மாதம் 3ம் தேதி பெரிய குளம் நகராட்சி தங்கும் விடுதியில் நடைபெறுகிறது.

நகர கழக அவைத் தலைவர் யு.ஏ.ரகீம்தலைமையிலும் இரா. முத்தையா எம். எல். ஏ. முன்னிலையிலும் இந்தக் கூட்டம் நடைபெறுகிறது.

கழகத் தோழர்கள் அனைவரும் கலந்து கொள்ளுமாறு செயலாளர் என். நல்ல வேலுச்சாமி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

## அமைச்சர் காளிமுத்துவுக்கு அலுவலர் சங்கம் பாராட்டு

சென்னை, செப். 28— மதுரை காமராஜ் பல்கலைக் கழகம் வேளாண்மைத் துறை அமைச்சர் காளிமுத்துவுக்கு டாக்டர் பட்டம் வழங்கியமைக்கு தமிழ்நாடு அரசு அலுவலர் கழகம்தனதுபாராட்டுதலை தெரிவித்திருக்கிறது.

## ஆதிவாசிகளுக்கு கொடுமை: குஜராத் போலீஸ் மீது புகார்

அஹமதாபாத், செப். 28— குஜராத் மாநிலத்தில் ஆதிவாசி மக்களைப் போலீசரர் தாக்கி கொடுமைபபடுத்தியதாகவும், ஆதிவாசிப்பெண்கள் கற்பழிக்கப்பட்டதாகவும் புகார் தெரிவிக்கப்பட்டுள்ளது,

இதுபற்றி கூறப்படுவதாவது:-

குஜராத் மாநிலம், பரோச் மாவட்டத்தில் பல்வேறு இடங்களில் ஆதிவாசிகள் ஏராளமாக வசிக்கிறார்கள்.

இந்த ஆதிவாசிகள் கூட்டத்தில் சம்பல் கொள்ளைக்காரர்கள் சிலர் கலந்து ஒளிந்திருப்பதாக போலீசாருக்குத் தகவல் கிடைத்தது.

இந்தக் கொள்ளைக்காரர்களைப் போலீசார் தேடும்போது ஆதிவாசியினரை போலீசார் தாக்கியதாகக் கூறப்படுகிறது.

### கண்டனக் கூட்டம்

குழந்தைகளும் முதியவர்களும்கூடபோலீசாரின் தாக்குதலுக்குத் தப்பவில்லையாம்.

ஆதிவாசிப் பெண்கள் சிலர் கற்பழிக்கப் பட்டதாகவும் கூறப்படுகிறது.

போலீசாரின் செயலைக் கண்டித்து 7 ஆயிரம் ஆதிவாசிகள் பங்கேற்ற கண்டனக் கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்தில் குஜராத் மாநில முன்னாள் முதலமைச்சர் பாபுபாய் பட்டேல் உட்பட பல எதிர்க் கட்சித் தலைவர்கள் கலந்துகொண்டனர்.

### சேய் முன் தாய் கற்பழிப்பு

இக்கூட்டத்தில், ஆதிவாசிப்பெண் ஒருவர் "தனது மூன்று குழந்தைகளின் முன்பே போலீசாரால் கற்பழிக்கப்பட்டதாக கூறினர்.

இச்சம்பவங்கள் குறித்து விசாரிக்க டி.ஐ.ஜி.அந்தஸ்தில் உள்ள ஓர் போலீஸ் அதிகாரியை சம்பவம் நடந்தஇடத்திற்கு மாநில அரசு அனுப்பி வைத்துள்ளது.

பஸ்களுக்கு தீ வைப்பு:

## ஆசிரியர் இணைப்பு சங்கம் கண்டனம்

தேவக்கோட்டை, செப். 28— தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் இணைப்பு இயக்க மாநில பொதுச் செயலாளர் குகானந்தம் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்துள்ளதாவது:—

தி.மு.க.வின் போராட்டத்திற்கு ஆதரவாகஆசிரியர்சங்கம் ஒன்று வெளியிட்டுள்ள அறிக்கைக்கு எனது கண்டனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஆசிரியர்கள் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் அரசுக்கு ஒத்துழைப்பு நல்கி பொது மக்களின்சொத்தான அரசு பஸ்களுக்கு சேதம் ஏற்படாவண்ணம் இயன்ற தன்னைத்தையும் செய்திட கடமைப் பட்டுள்ளார்கள்.

பொதுச் சொத்துகளை சேதப்படுத்துவது எந்த நிலையிலும் அனுமதிக்க முடியாதது ஆகும்.

இவ்வாறு குகானந்தம் தெரிவித்துள்ளார்.

## சென்னையில் தமிழர் பேரவை மாநாடு

சென்னை, செப். 28— தமிழ் நாட்டுத் தமிழர் பேரவையின் நான் காவது மாநிலமாநாடு அக்டோபர் மாதம் 4-ம்தேதி சென்னை ஏ.வி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடைபெறவிருக்கிறது.

என் மகாலிங்கம் மாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார்.

தற்காலிக தமிழகத்தின் நிலை, கல்வி, கைத்தொழில் வணிகம், வேளாண்மை, மருத்துவம், மொழி, நீதி, பண்பாடு ஆகியவை பற்றி மாநாட்டில் ஆராய்ந்து முடிவுகள் எடுக்கப்படும்.

பேரறிஞர்கள், இலக்கிய செல்வர்கள் பண்டித மேதைகள் பலரும் மாநாட்டில் கலந்து கொண்டு கருத்துரை வழங்குகிறார்கள்.

தமிழர் பேரவையின் பொதுச்செயலாளா கி.ஆ.பெ. விசுவநாதம் இத்தகவலை தெரிவித்திருக்கிறார்.

கழக அரசு கொண்டாடுகிறது:

## அண்ணாமலை செட்டியார் நூற்றாண்டு விழா

சென்னை, செப். 28 — தமிழ்நாடுஅரசின் சார்பில் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரின் நூற்றாண்டு விழா வரும் 30-ம் தேதி ராமநாதபுரம் மாவட்டம் காரைக்குடியில் நடைபெறவிருக்கிறது.

மேல் சபைத் தலைவர் ம.பொ.சி. விழாவுக்குத் தலைமை வகித்து அண்ணாமலைச் செட்டியார் உருவப் படத்தை திறந்து வைக்கிறார்.

அமைச்சர்கள் எஸ். டி. எஸ்., காளிமுத்து மற்றும் குன்றக்குடி அடிகளார் வாழ்த்துறை வழங்குகிறார்கள்.

சௌந்தரா கைலாசம் தலைமையில் கவியரங்கம் நடைபெறும். மதுரை காமராஜ் பல்கலைக்கழக துணை வேந்தர் டாக்டர் மாணிக்கம், நெடுமாறன் எம்.எல்.ஏ. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் சிட்டிபாபு மாவட்ட ஆட்சித்தலைவர் பாண்டே ஆகியோர் உரை நிகழ்த்துவார்கள்,

## டோங்கா நாட்டில் பிரதமர் இந்திரா: உற்சாக வரவேற்பு

நூகு-அலோபா, செப். 28- டோங்கா நாட்டில் சுற்றுப்பயணம் மேற்கொள்ள வந்த இந்தியப் பிரதமர் இந்திரா காந்திக்கு இங்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

வெளி நாடுகளில் இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி சுற்றுப் பயணம் மேற்கொண்டுள்ளது தெரிந்ததே.

இன்று காலை பிரதமர் இந்திராகாந்தி டோங்கா நாட்டில் சுற்றுப்பயணம் செய்ய வந்து சேர்ந்தார்.

அப்போது பிரதமர் இந்திராகாநதிக்குஉற்சாக வரவேற்பளிக்கப்பட்டது.

உலகில்உள்ளசிறிய நாடுகளில்ஒன்றானடோங்காவின் மக்கள் தொகை 11 லட்சமாகும்.

பலதீவுகளைஉள்ளடக்கிய இந்த நாட்டின் மக்கள் அனைவரும் பிரதமர் இந்திராவை வரவேற்க டோங்கா நாட்டின் தலைநகரான நூகு-அலோபா விற்கு வந்திருந்தனர்.

### பிரதமருக்கு விருந்து

விமான நிலையத்தில் டோங்காநாட்டின்பிரதமர் இளவரசர் துசிபெல்லேவும் மற்றும் அவரது அமைச்சரவையைச் சேர்ந்த அமைச்சர்களும் வரவேற்றனர்.

அதன் பிறகு பிரதமர் இந்திரா காந்தி அரண்மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு அவர் டோங்கா நாட்டின் மன்னர் டோபுவைச் சந்தித்து 45நிமிடங்கள் பேச்சுவார்த்தைநடத்தினர்.

அதன் பிறகு பிரதமர் இந்திராகாந்திக்கு விருந்து அளிக்கப்பட்டது.

இந்தவிருந்தில் அந்நாட்டின் ஒவ்வொரு தீவிலும் சிறப்பாக செய்யப்படும் ஒரு உணவுப் பொருள் இடம் பெற்றிருந்தது. விருந்துக்குப் பிறகு கலை நிகழ்ச்சி நடந்தன.

சென்னை 111-வது வட்டம்

## வடபழனியில் அண்ணா பிறந்தநாள் விழா

சென்னை, செப். 28— சென்னை 111வது வட்டம் வடபழனி கோயில் தெருவில் அண்ணா பிறந்தநாள் விழா பெரியார் பிறந்த நாள் விழா கழக கொடியேற்று விழா ஆகியவை கொண்டாடப் பட்டன. எச். வி. பாபு முன்னிலையில் எம். வாலு, விழாவுக்குத் தலைமை வகித்தார். ஜே. சேகர் வரவேற்றார்.

ஏழையின் காவலர் எம். ஜி. ஆர். மன்றம் சார்பில் நடைபெற்ற இந்த விழாவில் வீட்டுவசதிவாரியத்தலைவர் வேலூர் நாராயணன், புலவர் இந்திரகுமாரி, கு.க. செல்வம், தி. நகர் மூர்த்தி, கே. தட்சிணா மூர்த்தி, செ. சுந்தரம், து. மதிவாணன் ஆகியோர் பேசினார்கள். மன்றசெயலாளர் கே.பாபு நன்றி கூறினார்.

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 145
6 மாதச் சந்தா தொகை ரூ. 74
3 மாதச் சந்தா தொகை ரூ. 37

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

நிர்வாகி:
"அண்ணா"
34. நெல்சன் மாணிக்கம் சாலை,
அமைந்தகரை, : : சென்னை-29

# அண்ணா



வரி விலக்கு அளித்ததற்காக

## அரசுக்கு ஓட்டல் அதிபர்கள் பாராட்டு

சென்னை, செப். 28— சென்னை ஓட்டல் உரிமையாளர்கள் சங்கத்தின் பொதுக்குழுவில் அதன் தலைவர் எம்.பி.புருசோத்தமன் பேசுகையில் ஓட்டல் தொழிலுக்கு 6-10-80 முதல் விற்பனைவரி விதிவிலக்கு அளித்து, 7.9.78 முதல் 5.10.80 வரை வரியை தள்ளுபடி செய்த முதல்வர் புரட்சித்தலைவருக்கும் அமைச்சர் எஸ்.டி.எஸ்.சுக்கும் தமிழக அரசுக்கும் நன்றி தெரிவித்தார்.

கூட்டத்தில் பாலகிருஷ்ணராவ், ராமதாஸ் சீனுவாசராவ், ஆகியோர் பேசினர்.

அண்ணா தொழிற்சங்க முயற்சியால்

## சர்க்கரை ஆலை தொழிலாளருக்கு 'வாட்ச்' பரிசளிப்பு

சென்னை, செப். 28. அண்ணா தொழிற்சங்க பேரவையின் முயற்சியால் பாலக்கோடு, ஆர்பூர் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களுக்கு 'வாட்ச்' பரிசளிக்க உடன்பாடு ஏற்பட்டது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் பொதுச் செயலாளர் வை. பெருமாள், சர்க்கரை பிரிவு செயலாளர் டி. பொன்னுசாமி ஆகியோர் அமைச்சர் திருநாவுக்கரசு, சர்க்கரை தொழில் இயக்குனர் தங்கராஜ் ஆகியோருடன் பேச்சுவார்த்தை நடத்தினர்.

பேச்சுவார்த்தையில் சர்க்கரை ஆலைத் தொழிலாளருக்கு மகிழ்ச்சி தரும் வகையில் முடிவுகள் ஏற்பட்டன.

### 20 சதவிகித போனஸ்

சர்க்கரை ஆலைதொழிலாளர்களுக்கு சென்ற ஆண்டு 20 சதவிகித போனசும் தொழில் அமைதிகாத்த மோகனூர் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களுக்கு எச். எம். டி. தானியங்கி வாட்சும் பரிசளிக்கப்பட்டது.

அதுபோல் தர்மபுரி மாவட்டத்திலுள்ள பாலக்கோடுசர்க்கரை ஆலைஆம்பூர் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களுக்கும் 'வாட்ச்' வழங்குவதென முடிவு செய்யப்பட்டது.

மதுராந்தகம், கள்ளக்குறிச்சி, அலங்காநல்லூர் கூட்டுறவு சர்க்கரை ஆலை தொழிலாளர்களுக்கு 80-ம்ஆண்டின் சட்டப்படி கிடைத்த போனஸ் போக மேலும் அந்தந்த ஆலையின் லாபத்தின் அடிப்படையில் பொருட்கள் வழங்குவது இந்த ஆண்டு தீபாவளிக்கு முன்னதாகவே அதிகபட்சமாக வழங்க சுமுகமாகபேச்சுவார்த்தை நடத்த முடிவு செய்யப்பட்டது.

### முதல்வருக்கு நன்றி

இந்தப் பேச்சுவார்த்தைக்குப் பிறகு சர்க்கரை பிரிவு செயலாளர் பொன்னுசாமி கூறுகையில் தொழிலாளர்களுக்கு பரிசுகள் வழங்க வகை செய்த முதல்வர் புரட்சித்தலைவருக்கும் அமைச்சர்கள் ராகவானந்தம், திருநாவுக்கரசு, அண்ணா தொழிற்சங்கப் பேரவை பொதுச் செயலாளர் பெருமாள், ஆகியோருக்கும் தொழிலாளர்கள் சார்பில் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன என்றார்.

## அமைச்சர் எஸ் டி. எஸ். நிகழ்ச்சிகள்

வருவாய்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். சுற்றுப் பயண நிகழ்ச்சிகள்விவரம் வருமாறு:-

30-ந் தேதி காலை திருச்சி திருச்சியில் இருந்து கார் மூலம் காரைக்குடி சேர்தல். மாலை 4 மணி: காரைக்குடியில் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் நூற்றாண்டு நிறைவுவிழா. மாலை 5 மணி: காரைக்குடியில் வட்டாட்சியர் அலுவலக புதிய கட்டிடத் திறப்பு விழா. அக்டோபர் 1-ந் தேதி விழுப்புரம்.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

கம்பன் அடிப்பொடி, செட்டிநாட்டு அரசர் ராஜா முத்தையா செட்டியார் இளையபெருமாள் (எம்.எல்.ஏ.) கே. பாலசுப்பிரமணியன் (எம்.எல்.ஏ.), வித்வான் வே. லட்சுமணன். எம். ராமசாமி, டி.ச சாம்பமூர்த்தி. சிவாச்சாரியார், என். ரங்கராஜபட்டர். சென்னை ஆரிய சமாஜ பொதுச் செயலாளர், ஆணையர் மற்றும் செயலர் (வணிக மற்றும் அறநிலையத்துறை) இந்து சமய அறநிலையத் துறை ஆணையர் மேற்கண்டவர்கள் இந்த உயர் மட்டக்குழுவின் உறுப்பினர்கள் ஆவார்கள். இந்த குழுவின் உறுப்பினர்களின் பதவிக் காலம் 3 ஆண்டுகள் ஆகும்.

## இந்து சமய நிறுவன ஆலோசனைக் குழு: அரசு அமைத்தது

சென்னை, செப். 28— இந்துசமய நிறுவனங்களுக்கு உயர் மட்ட ஆலோசனைக்குழு ஒன்றைத் தமிழக அரசு நியமித்துள்ளது. 39 பேரை உறுப்பினர்களாகக்கொண்ட இந்த குழுவிற்கு அமைச்சர் ஆர்.எம் வீ. தலைவராக இருப்பார்.

தமிழகத்திலுள்ள எல்லா இந்து சமய நிறுவனங்களைப் பொறுத்து எழுகின்ற பிரச்சனைகளை ஆராய்ந்து தமிழக அரசுக்கு எடுத்துச்சொல்ல இந்த உயர்மட்டக் குழு அமைக்கப் பட்டுள்ளது.

இந்தக் குழுவிற்கு அமைச்சர் ஆர். எம். வீ. தலைவராக இருப்பார். இந்து சமய அறநிலை ஆட்சித் துறை ஆணையாளர் இக்குழுவின் செயலாளராக இருப்பார்.

### நீதிபதிகள், தமிழ் செம்மல்கள், ஆதீனங்கள்

இக்குழுவில் இடம் பெற்றுள்ள மற்ற உறுப்பினர்கள் விவரம் வருமாறு:—

ம.பொ.சி., நீதிபதிகள் சாமிக்கண்ணு செங்கோட்டு வேலன், டி. என். சிங்காரவேலு, ஓய்வு பெற்ற நீதிபதி என. கிருஷ்ணசாமி ரெட்டியார், மேஜர் ஜெனரல் எஸ். பி. மகாதேவன், காஞ்சிபுரம் சங்கராச்சாரியர் மடம் ஜயேந்திர சரசுவதி சாமிகள், திருவாவடுதுறை அம்பலவாணதேசிக பரமாச்சாரிய சாமிகள், தருமபுர ஆதீனம் சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரியார், மதுரை ஆதீனம் அருணகிரிஞானசம்பந்த தேசிக பரமாச்சாரியார், திருப்பனந்தாள் முத்து குமாரசாமி தம்பிரான், மதுராந்தகம் அகோபில மடம் அழகிய சிங்கர், ஜீயர் சுவாமிகள ஸ்ரீரங்கம் ஆண்டவன் சுவாமிகள், குன்றக்குடி அடிகளார், சாந்தலிங்க அடிகளார், நாங்குனேரி வானமாமலை மடத்து ஜீயர், சரவணப் பட்டி சுந்தரம்சுவாமிகள். கிருபானந்த வாரியார், என். மகாலிங்கம், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம், ஆ.வே.ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார், மு. அருணசலம், டாக்டர் ராதா தியாகராஜன், சவுந்தரா கைலாசம், கே. எஸ். ராமசாமி சுந்தரராம சுவாமிகள். டாக்டர்என். தேவநாதன்,

(4-ம் பத்தி பார்க்க)







பீகாரில்

## மத்திய அமைச்சர்கள் முன்னிலையில் இ.காங்கிரசார் அடிதடி

பாட்னா, செப். 28— மத்திய அமைச்சர்சள் முன்னிலையில் பீகாரில் இந்திரா காங்கிரஸ்காரர்கள் அடிதடியில் இறங்கினார்கள்.

ரத்தக்காயம் ஏற்படும் அளவுக்கு ஒருவரைஒருவர் அடித்துக் கொண்டனர்.

பீகாரில் பிரதேச காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் காங்கிரஸ் பொதுச் செயலாளர் ராஜேந்திர குமாரி பாஜ்பாய் மற்றும் சில மத்திய அமைச்சர்களும் கலந்து கொண்டனர்.

பிரதேச காங்கிரஸ் கமிட்டித்தலைவர் பேசிக் கொண்டு இருந்தபோது காங்கிரஸ்அதிருப்தியாளர் கோஷ்டித்தலைவர் வித்யாகர்கவி அடிக்கடி குறுக்கிட்டார்.

பெரும் அளவு பிரதிநிதிகள் கவியின் குறுக்கீட்டை ஆதரித்தனர். இதைத் தொடர்ந்து அடிதடியில் இறங்கினார்கள். ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டனர். சிலருக்கு ரத்தக்காயமும் ஏற்பட்டது.

திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்ட நபர் ஒருவர் தீக்குளிக்க முற்பட்டார்

## மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டவரை தி. மு. க. வாக்க முயற்சி

திருச்சி, செப், 28—திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்ட ஒரு ஆசாமி தீக்குளித்து மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். அவரை தி. மு. க. தியாகியாக்க மருத்துவமனைக்கு தி. மு. க. வினர் ஓடிச்சென்றனர். அந்த ஆசாமியை தி.மு.க.வைச்சேர்ந்தவர் என்று அறிவிக்க முற்பட்டனர்.

இந்த அரசியல் விந்தை சம்பவம் திருச்சி அருகே மீன்சுருட்டி என்ற ஊரில் நடந்துள்ளது. இதுபற்றிய விவரம் வருமாறு:-

திருச்சி மாவட்டம் மீன்சுருட்டி போலீஸ் சரகத்தில் ஒரு நபர் தீக்குளிக்க முற்பட்டார்என்ற புகார் வந்தது.

அந்த நபரின் பெயர் காட்டுப்பூனை என்கிற ராமையன். வெண்ணார் குழி என்ற கிராமத்தைச் சேர்ந்தவர்.

இந்தக் கிராமம் திருச்சி-தென் ஆற்காடு மாவட்ட எல்லையில் உள்ளது.

கடந்த சனியன்று இரவு இந்தக் காட்டுப்பூனை என்பவர் மண்ணெணையை தன் மேல் ஊற்றிக் கொண்டு நெருப்பை வைத்துக் கொண்டார்.

### எத்தனை காலம்தான் ஏமாற்றுவது

மற்றொரு கிராமத்துக்காரர் இதைப் பார்த்து விட்டார். தீயை அணைத்து விட்டார்.

ஆனாலும் தீக்காயம் அடைந்த காட்டுப்பூனை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்.

இப்படி ஒருவர் தீக்காயங்களுடன் மருத்துவமனையில் இருக்கிறார் என்ற செய்தி உள்ளூர் தி. மு. க. தலைவர்கள் காதில் விழுந்தது.

உடனே அந்த மருத்துவமனைக்கு ஓட்டோடிச் சென்றனர்.

அந்த நபர்—தீக்குளிக்க முற்பட்ட காட்டுப் பூனை-தி.மு.க.வைச் சேர்ந்தவர் என்று முத்திரை குத்த முற்பட்டுவிட்டனர். ஆனால் அந்த காட்டுப் பூனை என்பவர் திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்டவர் என்பதுதான் உண்மை.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras -600 029

Editor: E. PARASURAMAN